22nd April 1960]

*Strike notice from the Madras Electricity Employees' Union*

* *S.N.Q.* 11—SRI S. M. ANNAMALAI: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any notice has been received from the Madras Electricity Employees' Union to go on strike from 25th April; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Yes, Sir.

(*b*) The strike notice has been issued in respect of 28 demands.

SRI S. M. ANNAMALAI : இந்த வேலை நிறுத்தத்தைத் தடுக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ? அந்த நடவடிக்கைகளால் சமாதானப் பேச்சு வார்த்தைகள் முடிந்து விட்டதாகச் சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN: Under the Industrial Disputes Act, whenever a notice of strike was issued in any public utility concern, the matter is referred to conciliation and now it is pending before the Chief Conciliation Officer of this State.

SRI V. K. KOTHANDARAMAN : பேச்சு வார்த்தைகள் மூலமாக எந்த ஒரு சமரசத்திற்கும் வரவில்லையென்று சொன்னால் இதைத் தொழில் கோர்ட்டுக்கு விட உத்தேசம் இருக்கிறதா ? அல்லது வேறு எப்படி இதை முடிக்க உத்தேசம் ?

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, it is a hypothetical question.

SRI S. M. ANNAMALAI : ஸார் 1959-ம் வருஷம் நேகோஷியேஷன் கமிட்டியும் போர்டும் செய்துகொண்ட ஒப்பந்தத்தை அமல் நடத்த வேண்டும் என்ற பிரச்சினை பலகாலமாக இருந்து வருகிறது. அதை அமுல் நடத்தாவிட்டாலும் தொழிலாளர் சங்கத்துக்கும், போர்டுக்கும் ஏற்பட்ட இந்த ஒப்பந்தத்தையாவது அமுல் நடத்த உடனடியாக போர்டுக்கு சர்க்கார் சிபார்சு செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப்பற்றியெல்லாம் கன்ஸிலியேஷன் ஆபீசர் தான் கவனித்துப் பார்த்து முடிவு செய்ய வேண்டும்.

SRI J. MATHA GOWDER : அதுவும் ஒரு தொழில் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள்தான் ஸ்டிரைக் செய்கிறார்கள். இன்னொரு தொழில் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் வேலைக்குப் போகிறபோது அவர்களைக் கூட இவர்கள் வேலை செய்யவொட்டாமல் தடுத்து இருக்கிறார்கள். இந்தத் தகவல் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? வேலை செய்ய விரும்புகிற தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN: I take the information from the hon. Member.

SRI A. GOVINDASAMY : மின்சார ஊழியர்களின் 28 கோரிக்கைகளில் பணச் செலவே இல்லாத சில கோரிக்கைகள்கூட அடங்கியிருக்கின்றன. மின்சார ஊழியர்களிடத்தில் மின்சார போர்டுக்கு இருக்கிற நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காகவாவது இந்தப் பணச் செலவு இல்லாத கோரிக்கைகளை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதாக அரசாங்கம் சிபார்சு செய்ய முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கன்ஸிலியேஷன் ஆபீசர் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டபின் எந்த விதமான சிபார்சும் செய்ய முடியாது.

SRI N. K. PALANISAMI : 1959-ம் வருஷம் நெகோஸியேஷன் கமிட்டிக்கும் போர்டுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தப் பிரகாரம் தொழிலாளர்களைப் பழிவாங்கக் கூடாது என்று இருக்கிறது. இப்போது முக்கியமான நடவடிக்கைகள் எல்லாம் பழிவாங்குவதில் தான் இருக்கிறது என்று தொழிலாளர்கள் சொல்வதால் இதனாலேயே ப்ராவொகேஷன் ஏற்பட்டு இருப்பதனால் இதைப் பரிசீலனை செய்து சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தொழில் சங்கம் மின்சார போர்டு பழிவாங்குவதாகக் குற்றம் சாட்டுகிறது. பழிவாங்கும் நோக்கத்தோடு எதுவும் செய்யவில்லை. ரொட்டீன் அட்மினிஸ்ட்ரேஷன் தான் என்று போர்டார் சொல்கிறார்கள். ஆகவே இதை விசாரித்து கன்ஸிலியேஷன் ஆபீசர் தான் அபிப்பிராயம் சொல்ல வேண்டும்.

*Gramasevaks*

* 757 *Q*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

விவசாய இலாக்காவில் மேஸ்திரிகளை வேலையிலிருந்து நீக்கிவிட்டு, அதற்குப் பதிலாக இராம சேவக்குகளை நியமிக்கும்படி சர்க்கார் உத்தரவு செய்துள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Demonstration Maistries are employed in the Development Blocks in addition to Gramasevaks. The Government have issued orders to the effect that the number of Demonstration Maistries employed in the Blocks should be progressively reduced and that from the year 1961–62 there should be no Demonstration Maistries in any Block.

*Maistries in the Agriculture Department*

* 758 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா-

(அ) விவசாய இலாகாக்களில் மேஸ்திரிகளாக வேலை செய்துகொண்டிருந்தவர்களை எல்லாம் 1960–61 முதல் நீக்கிவிட்டு, தேசிய சமூக அபிவிருத்தி இலாகா டெமான்ஸ்ட்ரேஷன் மேஸ்திரிகளை நியமிக்கும்படியாக, உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதா ?

(ஆ) அதனால் எவ்வளவு பேர் வேலை இழப்பார்கள் ?

(இ) அப்படியாயின் அதற்கான காரணமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Orders were issued by the Government in January, 1958 to the effect that the number of Demonstration Maistries in each Community Development Block should be progressively reduced from year to year, that during the year 1960-61 there should not be more than two Demonstration Maistries in each Community Development Block and that from the year 1961-62, there should be no Demonstration Maistries in any Development Block. At present, there are only 2 Demonstration Maistries in each Community Development Block.

(*b*) Correct figure is not readily available.

(*c*) With the extension of National Extension Service and Community Development Projects to more and more areas the need for employment of Demonstration Maistries in the Community Development Blocks ceases as the Village Level workers in the Community Development Blocks, with better qualifications than Demonstration Maistries by way of special training, can do all items of work now being attended to by the Demonstration Maistries in non-Development areas.